POST WITHOUT PRE-PAYMENT LICENCE NO. G 6-TN-MS C. P. P. 55    ANNA Leading Progressive Tamil Daily of the People

# தமிழக வெள்ளப் பகுதிகளில் பிரதமர் ராஜீவ்

Regd. No. TN-MS (C) 422    Phone : 420212    4 பக்கம்    விலை 60 காசு

அண்ணா

நிறுவனர்: எம்.ஜி.ஆர்

[மலர் 10] சென்னை 15-11-1985 வெள்ளி    வெளியூர் 16-11-1985 சனி    [இதழ் 28]

## ஹெலிகாப்டரில் சென்று பார்வையிட்டார்

## விமான நிலையத்தில் கவர்னர் குரானா- முதல்வர் புரட்சித்தலைவர் வரவேற்பு

சென்னை, நவ. 15- தமிழ்நாட்டில் வெள்ளத்தால் பாதிக்கப்பட்ட பகுதிகளை பிரதமர் ராஜீவ் ஹெலிகாப்டர் விமானத்தில் சென்று பார்வையிட்டார். முன்னதாக சென்னை விமான நிலையத்தில் பிரதமரை கவர்னர் குரானா, முதல்வர் புரட்சித்தலைவர் சந்தன மாலை அணிவித்து வரவேற்றனர்.



சென்னை, நவ. 15— தமிழ்நாட்டில் ஏற்பட்டு இருக்கும் பயங்கர வெள்ள பாதிப்பு இடங்களை பிரதமர் ராஜீவ் காந்தி இன்று மாலை சுற்றி பார்த்தார்.

வெள்ளப் பாதிப்பை பார்வையிட பிரதமர் ராஜீவ்காந்தி இன்று பிற்பகல் 2,55 மணிக்கு விசேஷ ராணுவ விமானத்தில் மீனம்பாக்கம் வந்து சேர்ந்தார்.

பிரதமர் ராஜீவ்காந்தியை ஆளுநர் குரானாவும், முதல்வர் புரட்சிதலைவரும் அகில இந்திய காங்கிரஸ் பொதுச் செயலாளர் கருப்பையா மூப்பனார் பழனியாண்டி ஆகியோர் வரவேற்றனர்.

அமைச்சர் பெருமக்களும் உயர் அதிகாரிகளும் பிரதமரை வரவேற்றனர்

மீனம்பாக்கம் வந்த பிரதமர் ராஜீவ்காந்தி உடனேயே ஒரு ஹெலிகாப்டரில் ஏறி வெள்ளப்பகுதிகளை பார்வையிட புறப்பட்டார்.

பிரதமர் ராஜீவ் காந்தியுடன் நிதியமைச்சர் டாக்டர் நாவலர், தலைமைச் செயலாளர் டி. வி. அந்தோணி, ஆகியோர் உடன் சென்றனர்.

சென்னை நகரில் இருந்து புதுவை வரை வெள்ளப் பாதிப்பு பகுதிகளைப் பார்வையிடுகிறார்.

சென்னை நகரம் செங்கற்பட்டு தென்ஆற்காடு, ஆகிய பகுதிகளைப்பார்வையிட்டு புதுவை செல்கிறார்.

புதுவையில் இருந்து ஹெலிகாப்டர் மூலம் 5.30 மணிக்கு மீனம்பாக்கம் விமான நிலையம் வந்து சேர்கிறார்.

விமான நிலையத்தில் முதல்வர் புரட்சித்தலைவருடன் பிரதமர் வெள்ளச் சேதம் பற்றி வாதிக்கிறார்.

உயர் அதிகாரிகளுடனும் விவாதிக்கிறார்.

மாலை 6 மணிக்கு விமான நிலையத்தில் நிருபர்களைச் சந்திக்கிறார்.

10 நிமிட நேரம் நிருபர்கள் கூட்டத்தில் பேசுகிறார்.

சுமார் 45 நிமிடம் விமான நிலையத்தில் தங்கி இருக்கும் பிரதமர் 6.15 மணிக்குவிமானம்மூலம் புறப் படுகிறார்.

### வரவேற்பு

பிரதமர் வந்த விசேஷ விமானம் மதியம் 2.55க்கு வந்தது.

விமானத்திலிருந்து இறங்கிய பிரதமர் ராஜீவை கவர்னர் குரானாவும், முதல்வர் புரட்சித்தலைவரும் சந்தன மாலைகள் அணிவித்து வரவேற்றனர்.

சில நிமிடங்கள் விமான நிலையத்தில் இருந்த பிரதமர் 3 மணிக்கு ஹெலிகாப்டர் மூலம் வெள்ளப் பகுதிகளைசுற்றிப்பார்க்க புறப்பட்டார்.

விமான நிலையத்தில் பிரதமரை மேலவைத் தலைவர் ம. பொ. சி., அமைச்சர்கள் மற்றும் பிரமுகர்கள் வரவேற்றனர்.

## நேரு சமாதியில் ஜனாதிபதி- பிரதமர் ராஜீவ் அஞ்சலி

புதுடெல்லி, நவ. 15— ஜவஹர்லால் நேருவின் 96-வது பிறந்த தினம் நேற்று நாடு முழுவதும் கொண்டாடப்பட்டது.

டெல்லி சாந்தி வனத்தில் நேரு சமாதியில் ஜனாதிபதி ஜைல்சிங், துணை ஜனாதிபதி ஆர். வெங்கட்ராமன், பிரதமர் ராஜீவ் காந்தி ஆகியோர் மலர் வளையம் வைத்து அஞ்சலி செலுத்தினர்.

ஏராளமான குழந்தைகள் நேரு சமாதியில் அஞ்சலி செலுத்தி தேசபக்தி பாடல்களைப் பாடினர்.



வெள்ளத்தால் பாதிக்கப்பட்ட பகுதிகளை முதல்வர் புரட்சித்தலைவா பார்வையிட்டார், நிவாரணப்பணிகள் பற்றி அவரிடம் போலீஸ் கமிஷனர் தேவாரம் தெரிவித்தார் அமைச்சர்கள் ஐ. உ. ச, அண்டே மாநகராட்சி கமிஷனா சாந்த ஷீலா நாயர், சைதை துரைசாமி எம். எல். ஏ. உடனிருக்கின்றனர்.

## வெள்ளச்சேதம்: பிரதமர் ராஜீவிடம்புரட்சிதலைவர் அறிக்கை அளிக்கிறார்

சென்னை, நவ. 15— பிரதமர் ராஜீவ் காந்தியிடம் தமிழகத்தில் ஏற்பட்டுள்ள வெள்ள சேதம் பற்றிய விரை அறிக்கையைமுதல்வர்புரட்சித் தலைவர் அளிக்கிறார்,

தமிழ்நாட்டில் பலத்த மழையால் பாதிக்கப்பட்டுள்ள பகுதிகளில் நடைபெறும் நிவாரணப் பணிகள் குறித்து முதல்வர் புரட்சித் தலைவர் இன்று கோட்டையில் ஆலோசனை நடத்தினார்,

இந்த ஆலோசனையில் அமைச்சர் டாக்டர் நாவலர் தலைமைச் செயலாளர் டி. வி. அந்தோணி, போர்டு உறுப்பினர் அரிபாஸ்கர்: உள்துறைச் செயலாளர் டி,வி, வெங்கட்ராமன், வருவாய்த்துறை செயலாளர் தங்கராஜ். பொதுத்துறை செயலாளர் யு. எஸ். நடராஜன் மாநகராட்சித்தனி அதிகாரி மாதவ சர்மா செங்கற்பட்டு மாவட்ட கலெக்டர் மாத்யூ ஆகியோா பங்கேற்றனர்.

பலத்தமழையால் தமிழகத்தில் ஏற்பட்டுள்ள சேத விவரங்கள், அதற்கான நிவாரணப்பணிகள் குறித்து ஆலோசிக்கப்பட்டது.

பல்வேறு பகுதிகளிலும் ஏற்பட்டுள்ள சேத விவரங்கள் குறித்த விபரங்களையும், வெள்ளச் சேதம் குறித்த புகைப்பட ஆல்பத்தையும் முதல்வர் புரட்சித்தலைவர் பிரதமர் ராஜீவ்காந்தியிடம் அளிக்கிறார்.

பிரதமரிடம் தரப்பட வேண்டிய விவரங்கள் குறித்தும் இக்கூட்டத்தில் ஆலோசிக்கப்பட்டது.

## செய்யாறு தேர்தல்

சென்னை, நவ. 15— செய்யாறு சட்டமன்ற தொகுதிக்கான இடைத் தேர்தல் பற்றிய அதிகாரப் பூர்வ அறிவிப்பு இன்று வெளியிடப்பட்டது.

இத்தேர்தலுக்கு நாளை முதல் 22—ந் தேதி வரை, வேட்பு மனுதாக்கல் செய்யலாம் 23 ந்தேதிமனுக்கள் பரிசீலிக்கப்படும் 25 ந் தேதி வேட்பு மனு வாபஸ் பெற கடைசி நாளாகும் டிசம்பர் 16ந்தேதி வாக்குப் பதிவு நடைபெறுகிறது.

## உயிரிழந்தோர் அனைவரது குடும்பத்துக்கும் நிதி உதவி: புரட்சித்தலைவர் அறிக்கை

முதல்வர் புரட்சித்தலைவர் விடுத்துள்ள அறிக்கையில் தெரிவித்திருப்பதாவது:-

என்னை வாழவைக்கும் தாய்மார்களே என்னை வழி நடத்திச் செல்லும் பெரியோர்களே என் ரத்தத்தின் ரத்தமான உடன்பிறப்புக்களே

தொடர்ந்து 10 நாட்களாக தமிழகம் முழுவதும் குறிப்பாக சென்னை, செங்கற்பட்டு, தென் ஆற்காடு, தஞ்சை மாவட்டங்கள் எப்போதும் இல்லாத அளவுக்கு இந்த ஆண்டு கடும் மழையாலும் புயலாலும் பாதிக்கப்பட்டு மிகுந்த உயிர்ச் சேதமும், பொருட் சேதமும், ஏற்பட்டுள்ளதை அனைவரும் உணருகிறோம்

மக்கள் பட்டுள்ள ஆற்றொணா துன்பத்தை நான் 14-11-85 ம் தேதி அன்று நேரில் சென்று பார்வையிட்டு வந்துள்ளேன் பாதிப்பு அதிகம் என்றாலும் தமிழக அரசு எல்லாவிதமான நடவடிக்கைகளையும் போர்க்கால அடிப்படையில் எடுத்து வருகிறது

செஞ்சி அருகே தந்தை பெரியார் போக்குவரத்துக் கழகத்தைச் சேர்ந்த பேருந்து ஒன்று 53 பயணிகளுடன் காட்டாற்று வெள்ளத்தில் அடித்துச் செல்லப்பட்டு அதில் பயணம் செய்த அனைவரும் இறந்திருப்பார்களோ என்று எண்ணும் வகையில் இதுவரை 37 சடலங்கள் மீட்கப்பட்டுள்ளன,

இது ஓர் எதிர்பாராத கோர விபத்தாகும் இத்துயரச் செய்தி எனக்கு மிகுந்த மனவேதனையையும், வருத்தத்தையும் அளிக்கிறது.

இந்த வெள்ளத்தால் ஏற்பட்ட விபத்தில் உயிர் இழந்தோர் குடும்பத்தார்களுக்கு எனது ஆழ்ந்த அனுதாபத்தையும், இரங்கலையும் தெரிவித்துக் கொள்வதோடு உயிரிழந்தோரின் குடும்பங்கள் அனைத்துக்கும் முதல் அமைச்சர் நிவாரண நிதியில் இருந்து ரூபாய் 5 ஆயிரம் வழங்கப்படும் என கூறிக் கொள்ளுகிறேன்,

தமிழக மக்களின் இன்ப துன்பங்களில் பங்கேற்பதில் அண்ணாவின் அரசு என்றும் பின் வாங்காது என கூறிக்கொண்டு நிவாரணப் பணிகளை துரிதப்படுத்தி மக்களின் துயர் துடைத்து சகஜநிலைக்கு கொண்டு வரும் என உறுதி அளிக்கிறேன்

அண்ணா நாமம் வாழ்க

இவ்வாறு முதல்வர் புரட்சித்தலைவர் அந்த அறிக்கையில் கூறியிருக்கிறார்

## மத்திய அமைச்சராக அர்ஜுன்சிங்

புதுடெல்லி, நவ. 15— பஞ்சாப் மாநில கவர்னராக இருந்த அர் அர்ஜுன்சிங் தனதுபதவியை ராஜினாமா செய்துவிட்டது தெரிந்ததே.

இன்று அவர் மத்திய வர்த்தக மந்திரியாக நியமனம் செய்யப்பட்டார். காபினெட் மந்திரியாக அவர் பதவி ஏற்றார். ஜனாதிபதி ஜைல்சிங் அவருக்குப் பதவி பிரமாணம் செய்து வைத்தார்.

பதவி ஏற்பு விழாவில்பங்கேற்ற பிரதமர் ராஜீவ் காந்தியிடம் நிருபர்கள், பஞ்சாபில் சிறப்பாக செயல்பட்ட காரணத்தால் அர்ஜுன்சிங்கிற்கு பரிசாக இப்பதவி அளிக்கப்பட்டுள்ளதா எனக்கேட்டனர்.

"அவருக்கு தொடர்ந்து பணியளிக்கப்பட்டுள்ளது இதில் பரிசு என்ற பேச்சுக்கு இடமில்லை" என பிரதமர் கூறினார்.

(முன்வந்த செய்தி மூன்றாம் பக்கம்)





கோட்டூர்புரத்தில் ஏற்பட்டுள்ள வெள்ள சேதங்களை முதல்வர் புரட்சித்தலைவர் பார்வையிட்டார்





**புதுமை**

வேண்டாத பழமையைத் தள்ளி, வேண்டிய புதுமைகளை ஏற்க கற்றுக் கொள்ள வேண்டும்.

—பேரறிஞர் அண்ணா

**மெய்மை**

எத்தனை குழப்பம் நேர்ந்தாலும், பொய்மை மறைந்து விடும். மெய்மை மேலே உயர்ந்து நிற்கும்.

—தந்தை பெரியார்

# தனியார் பொறியியல் கல்லூரிகளில் குறை இருப்பின் நீக்கப்படும்

## அமைச்சர் அரங்கநாயகம் அறிவிப்பு

கோவை, நவ. 15— தனியார் பொறியியல் கல்லூரிகள் சிலவற்றில் குறைகள் உள்ளதாக கூறப்படும் குறைகளை அகற்ற தக்க நடவடிக்கை எடுக்கப்படும். என அமைச்சர் அரங்கநாயகம், கூறியுள்ளார்,

தமிழ்நாடு அனைத்துக் கல்லூரி மாணவர்கள் கோவையின் சார்பில் தமிழ்நாடு அனைத்து என்ஜினீயரிங் மாணவர் பிரதிநிதிகள் மாநாடு கோவையில் நடைபெற்றது.

மாநாட்டில் கலந்து கொண்டு சிறப்புரையாற்றிய தமிழக கல்வி அமைச்சர் செ. அரங்கநாயகம் பேசுகையில் கூறியதாவது

இன்றைக்கு பல்வேறு என்ஜினீயரிங் கல்லூரிகளிலிருந்து இங்கே கூடி விவாதித்து என்னிடம் பல கோரிக்கைகளை தந்துள்ளீர்கள் தமிழ்நாடு அரசானது ஆக்க பூர்வமான முறையில் தனது திட்டங்களை நிறைவேற்றி வருகிறது உங்களது கோரிக்கைகள் நிச்சயம் பரிசீலிக்கப்பட்டு பல்வேறு விவாதங்களை மேற்கொண்டு அவை நிச்சயம் விரைவில் அமலுக்கு கொண்டு வருவோம்.

### குறையகற்ற குழுக்கள்

சுயநிதி தனியார் பொறியியல் கல்லூரிகள் பெருக்கத்தால் வேலைவாய்ப்புகள் கிடைக்காதென கருதுகிறீர்கள். வேலைவாய்ப்பினை வைத்து மட்டும் தொழிற் கல்வி பெறுவது என்பது இனி வருங்காலத்தில் எடுபடாது. ஏனெனில் வளரும் நாடுகளில் தொழில் வளம் பெருக படித்த என்ஜினீயரிங் பட்டதாரிகள் சுய தொழில் துவங்கி தொழில்வளம் பெருகச் செய்வது மிகவும் அவசியமாகிறது. ஆகவே என்ஜினீயரிங் கல்லூரிகள் அதிகம் தேவைப்படுகிறது. அதே சமயத்தில் இனி சுயநிதி என்ஜினீயரிங் கல்லூரிகள் பெருக்கம் நிச்சயம் கட்டுப்படுத்தப்படும் என்பதனை தெரிவித்துக் கொள்கிறேன்.

சுயநிதி என்ஜினீயரிங் கல்லூரிகளில் உள்ள குறைபாடுகளை தெரிவித்துள்ளீர்கள். அதற்கான உயர்மட்ட குழுக்கள் பல்கலைக் கழகங்கள் மற்றும் தொழில் கல்வி இயக்குனரகம்சார்பில் அமைக்கப்பட்டு அவை தற்போது இந்த சுயநிதி என்ஜினீயரிங் கல்லூரிகளை ஆய்வு செய்து வருகிறது. அதன் முடிவுகளை அறிந்து அதன்பின் சரியாக செயல்படாத என்ஜினீயரிங் கல்லூரிகள் சரியாக செயல்பட வசதிகளை செய்து தர அரசானது நடவடிக்கை எடுக்கும் என்பதனை இங்கு தெரிவித்துக் கொள்கிறேன்.

என்ஜினீயரிங் மாணவர்களாகிய நீங்கள் தாய்மொழிக்கல்வியை எதிர்க்கிறீர்கள். ஒரு மரத்தும் தனது தாய்மொழியில் என்ஜினீயரிங் கல்வியை கற்று அந்த பட்டதாரிகளுக்கு வேலை வாய்ப்புகளை அந்தந்த மாநிலங்கள் உருவாக்குவது தான் எதிர்காலத்தில் மிகவும் பயனுள்ளதாக அமையும். அதுவும் படிப்படியாகத்தான் செய்யப்படும் மேலும் உங்கள் கருத்துக்கள் பெறப்பட்ட பின்னரே அமலுக்கு கொண்டு வரப்படும்.

எனவே கல்வியில் நாட்டம் செலுத்துவதுடன் மனித சக்தியின் மதிப்பினை உணர்ந்து செயல்பட வேண்டுகிறேன்.

இவ்வாறு அமைச்சர் அரங்கநாயகம் கூறினார்.

# விடுதலைபுலிகளுடன் போர்: இலங்கை மந்திரி கொக்கரிப்பு

கொழும்பு, நவ. 15— விடுதலைப்புலிகளுடன் யுத்தத்துக்கு தயார் என்று இலங்கை நிதி மந்திரி ரோனிடிமெல் கொக்கரித்தார்.

இலங்கை நாடாளுமன்றத்தில் நிதிமந்திரி ரோனி டிமெல் நிதி நிலை அறிக்கையை தாக்கல் செய்து பேசினார்,

விடுதலைப்புலிகள் நடத்தும் யுத்தத்தால் இலங்கையின் பொருளாதாரம் சீர்கேடு அடைந்துள்ளது.

இலங்கை முன்னேற அமைதி ஏற்படுவது முக்கியம் என்று அவர் பேசும் போது கூறினார்,

### போருக்குத் தயார்

விடுதலைப்புலிகள் சமாதானத்தை விரும்பாவிட்டால் நாங்கள் போருக்குத் தயார் என்றும் அந்த மந்திரி கூறினார்.

பேச்சுவார்த்தை மூலம் சமரசம் ஏற்படா விட்டால் ராணுவத்தின் மூலம் தீர்வுகாண தயாராக இருப்பதாகவும் ரோனி டிமெல் மிரட்டல் விடுத்தார்

விடுதலைப் புலிகளை வீழ்த்த தங்கள் ராணுவத்துக்கு சக்தி இருப்பதாகவும் ரோனிடிமெல் நாடாளுமன்றத்தில் குறிப்பிட்டார்.

# மழையோ மழை

சென்னை, நவ. 15— நேற்று காலை 8.30 மணியுடன் முடிந்த கடந்த இருபத்துநான்குமணிநேரத்தில் வேதாரண்யத்தில் ஆயிரத்து 230 மில்லி மீட்டர் மழைபெய்தது.

சென்னை மீனம்பாக்கத்தில்ஆயிரத்து 208 மில்லிமீட்டர் மழையும், நுங்கம்பாக்கத்தில் ஆயிரத்து 134 மில்லி மீட்டர் மழையும் பதிவாகி இருக்கிறது.

நாகப்பட்டினத்தில் 998 மில்லி மீட்டர் மழையும் கடலூரில் 939 மில்லி மீட்டர் மழையும் பெய்தது.

தமிழகத்திலேயே வேதாரண்யத்தில்தான் மிக அதிகமான மழை பெய்திருக்கிறது.

# பட்டதாரிகள் ஆசிரியர்கள் தொகுதி வாக்காளர் பட்டியல்

சென்னை, நவ. 15— பட்டதாரிகள் மற்றும் ஆசிரியர்கள் தொகுதிகளுக்கான வாக்காளர் பட்டியல்களின் பெயர்களைச்சேர்ப்பதற்கான விண்ணப்பங்களை அனுப்புவதற்கு 6-11-1985 கடைசி நாள் என்ற காலவரம்பினை மேலும்நீடித்துக் கொடுக்கும்படி வேண்டுகோள்கள் அரசுக்கு வந்துள்ளன.

இதுபற்றி தேர்தல் அதிகாரி. டி. கே. ஓசா கூறியிருப்பதாவது:-

6-11-1985-க்கு மேல் அனுப்பப்படும்விண்ணப்பங்களும், வாக்காளர் பதிவு அலுவலர்களால் பெற்றுக் கொள்ளப்படும். இவ் விண்ணப்பங்களையும் வரைவுப் பட்டியலை வெளியிடும் நாளான 23-12-1985 (திங்கட்கிழமை)-க்குப் பின்னர் அனுப்பப்படும் உரிமை கோரிக்கை விண்ணப்பங்களுடன் சேர்த்து விதிகளின் படி, பரிசீலித்து பட்டியலில் சேர்த்துக் கொள்ளவகைச் செய்யப்பட்டுள்ளது.

வரைவுப் பட்டியல்கள் 1985 டிசம்பர் இருபத்தி மூன்றாம் தேதி (23-12-85) வெளியிடப்படும். 1986 ஜனவரி ஏழாம் தேதி செவ்வாய்க்கிழமை (7-1-1986) வரையில் கோரிக்கைகள் சேர்த்துக் கொள்ளப்படும்.

இவ்வாறு டி.கே. ஓசா கூறியுள்ளார்.

# பொன்னேரி வெள்ளசேதம்: சேகர் எம்.எல்.ஏ நடவடிக்கை

பொன்னேரி, நவ. 15- செங்கல்பட்டு மாவட்டம் பொன்னேரி தாலுக்கா அலமாதிக்குப்பம் ஏரி தண்ணீர் கசிவு ஏற்பட்டு உடையும் தருவாயில் இருந்தது.

இந்தககவல் அறிந்தவுடன் கழக சட்டமன்ற உறுப்பினர் கே. பி. கே சேகர் ஏராளமான கிராமமக்களுடன் சென்றுகரையை செப்பனிடும் வேலையில் ஈடுபட்டார். வருவாய் துறை அதிகாரி மூர்த்தியும் உடனடி நடவடிக்கைகளில் ஈடுபட்டார்.

பொன்னேரி பகுதியில் பாதிக்கப்பட்ட இடங்களுக்கும் மூர்த்தி மற்றும் எம். எல். ஏ. சேகர் ஆகியோர் உடன் சென்று நிவாரணப்பணிகளை துரிதப்படுத்தினர்.

# எல்லாப் பகுதிகளுக்கும் மின்சார சப்ளை

சென்னை, நவ. 15— வெள்ளம் காரணமாக நிறுத்தப்பட்டிருந்த மின்சார சப்ளை இன்று எல்லா பகுதிகளுக்கும் வழங்கப்பட்டது.

வெள்ளம் காரணமாக மின்சார டிரான்ஸ் பாரமர்கள் பல சேதம் அடைந்தன. அவை சீர்படுத்தப்பட்டுவிட்டன.

ஒயர்கள் பழுது பட்ட பகுதிகளில் புதிய ஒயர்கள் பொருத்தப்பட்டு திங்கட்கிழமைக்குள் மின் இணைப்பு வழங்க ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது, என்று தமிழ்நாடு மின்சார வாரிய தலைவர் பி. விஜயராகவன் நிருபர்களிடம் கூறினார்,

### மின் உற்பத்தி பாதிப்பு

வெள்ளம் புகுந்ததால் 8 மின் உற்பத்தி துணை நிலையங்களில் ஏழு நிலையங்கள் பாதிக்கப்பட்டன.

வெள்ளம் வடிந்துவிட்டதால் அவை மீண்டும் மின் உற்பத்தியை தொடங்கியுள்ளன.

எண்ணூர் அனல் மின் நிலையம் இன்று மாலைக்குள் சீர்படுத்தப்பட்டு உற்பத்தியை துவங்கும் என்று விஜயராகவன் சொன்னார்.

தற்போது தூத்துக்குடி அனல்மின் நிலையத்திலிருந்து 620 மெகாவாட் மின்சாரமும், நெய்வேலியிலிருந்து 120 மெகாவாட் மின்சாரமும், கல்பாக்கம் அணு மின்நிலையத்திலிருந்து 80 மெகாவாட் மின்சாரமும் நீர்மின் நிலையங்களிலிருந்து ...கோடி யூனிட் மின்சாரமும் கிடைப்பதாக விஜயராகவன் மேலும் கூறினார்.

# உடைப்பெடுத்த சாலைகள் 2 நாளில் சீராக்கப்படும்

சென்னை, நவ. 15— மழை வெள்ளத்தால் உடைப் பெடுத்த ரோடுகள் இன்னும் இரண் நாளில் சீராக்கப்பட்டு விடும்.

பெருமழை காரணமாக தாம்பரம்- மதுராந்தகம் இடையே உள்ள நெடுஞ் சாலை உடைப் பெடுத்து துண்டிக்கப்பட்டுள்ளது.

உடைப்பெடுத்த பகுதிகளில் மணல் மூட்டைகள் அடுக்கி அவற்றை சீராக செப்பனிடும் பணி தீவிரமாக நடந்து வருகிறது.

### ஊரப்பாக்கம்

சென்னையிலிருந்து 35 கிலோ மீட்டர் தூரத்தில் உள்ள ஊரப்பாக்கம் என்ற இடத்தில் ரோடு, வெள்ளத்தால் அப்படியே அரிப்பெடுத்து போய்விட்டது.

இதே போல் கருங்குழியிலும் ரோடு வெள்ளத்தோடு போய் விட்டது. அவற்றை சீர்படுத்தி சென்னைக்கு போக்கு வரத்து தொடர தீவிர நடவடிக்கைகள் மேற்கொள்ளப் பட்டுள்ளன.

ஊரப்பாக்கத்தில் பாலம் ஒன்றும் உடைந்துள்ளது.

### சாலை சீரமைப்பு

அந்தப்பகுதியில் ரோட்டுக்கு மேல் 3 அடி தண்ணீர் ஓடிக்கொண்டிருந்தது. அந்தப் பகுதியும் சீர்படுத்தப் படுகிறது.

இரண்டு நாளில் இவைவசீர் படுத்தப்பட்டு போக்கு வரத்து நடைபெறும் என்று அதிகாரிகள் கூறினார்கள்

உடைப்பெடுத்த பகுதிக்கு வாகனங்கள் சென்று விடாமல் இருக்க போலீசார் நின்று, போக்கு வரத்தை பாதுகாப்பான வழியில் திருப்பி விடுகிறார்கள்,

மதுராந்தகம் தாலூகாவில் 20 கிராமங்கள் வெள்ளம் சூழ்ந்து துண்டிக்கப்பட்டுள்ளன,

# போதை மருந்து கடத்தினால் 20 ஆண்டு கடுஞ்சிறை

புதுடெல்லி, நவ. 15— போதை மருந்துகளை கடத்தும் ஆசாமிகளுக்கு 20 ஆண்டு கடுங்காவல் சிறைத்தண்டனையும் 2 லட்சம் ரூபாய் வரை அபராதமும் விதிக்கப்படும் என்று மத்திய அரசு அறிவித்திருக்கிறது. இதற்காக சட்டம் அமலாக்கப்பட்டுள்ளது

கஞ்சா, அபின், ஹீரோயின், மற்றும் போதை மாத்திரைகள்ஊசி போதைகளை கடத்திவரும் ஆசாமிகள் மீது கடும் நடவடிக்கை எடுக்கப்பட்டு வருகிறது.

சில மருந்து கடைகளில் போதை மாத்திரைகள் மற்றும் ஊசி மூலம் உடலில் ஏற்றும் போதை மருந்துகளும் விற்கப்படுகின்றன. அனுமதி இல்லாமல் விற்கப்படும் மருந்துக் கடைகள் மீதும் நடவடிக்கை எடுக்கப்பட்டு வருகிறது.

போதை மருந்துகளைக் கடத்தும் ஆசாமிகளுக்கு தண்டனை அளிப்பதை அரசு மேலும் கடுமையாகிக்கியிருக்கிறது.

போதை மருந்துகளை கடத்தும் குற்றவாளிகளுக்கு கடுந்தண்டனை அளிக்க வகை செய்யும் அளவில் போதை மருந்து கடத்தல் தடுப்புச் சட்டமும் திருத்தி அமைக்கப்பட்டுள்ளது.

போதை மருந்துகளை கடத்தும் ஆசாமிகளுக்கு இந்த புதிய சட்டப்படி 10 ஆண்டு கடும் சிறைத் தண்டனை விதிக்கப்படும் தவிர ரூபாய் ஒரு லட்சம் வரை அபராதமும்விதிக்கப்படும்.

குற்றவாளிகள் மீண்டும் கடத்தலில் ஈடுபடுவார்களேயானால் அவர்களுக்கு 20 ஆண்டு கடுஞ் சிறையும் 2 லட்சம் ரூபாய் வரை அபராதமும் விதிக்கப்படும்.

ஒரு குற்றவாளி மீண்டும் தொடர்ந்து கடத்தலில் ஈடுபட்டால் அவருக்கு குறைந்தபட்சம் 15ஆண்டு கடுஞ்சிறையும், குறைந்தபட்சம் ஒன்றரை லட்சம் ரூபாய் அபராதமும் விதிக்கப்படலாம். இந்த 15 ஆண்டு சிறைதண்டனை மேலும் 30 ஆண்டுகள் நீட்டிக்கவும் இந்தபுதியசட்டம் வகை செய்கிறது.

அபராதமும்மேலும் 3லட்சம் ரூபாயாக உயர்த்த வகை செய்யப்பட்டுள்ளது

கஞ்சாவை அனுமதியில்லாமல் பயிர் செய்யும் ஆசாமிகளுக்கு அதிகபட்சம் 5 ஆண்டு கடுஞ்சிறைத் தண்டனை விதிக்கப்படும்.

இந்த 5 ஆண்டுகள் அவர்களிடம் கடுமையாக வேலை வாங்கப்படும் தவிர இந்தக் குற்றவாளிகளுக்கு 50 ஆயிரம் ரூபாய் தண்டனை விதிக்கவும் சட்டத்தில்வகை செய்யப்பட்டுள்ளது.

இந்த புதிய சட்டம் நேற்று முதல் அமலுக்கு வந்துள்ளது,

# திரிகோணமலைக்கு வெளி நாட்டினர் போக இலங்கை அரசு தடை

கொழும்பு, நவ 15— இலங்கையில் உள்ள திரிகோணமலைக்கு வெளிநாட்டினரும், பத்திரிகையாளரும் செல்ல இலங்கை அரசு தடை விதித்துள்ளது.

தமிழர்கள் அதிகம்வசிக்கும் பகுதி திரிகோணமலை அந்த மாவட்டத்தின் கிழக்குப்பகுதிக்குள் வெளிநாட்டினரும் பத்திரிகையாளரும் செல்லக்கூடாது என்று எல்லையை இலங்கை அரசு மூடி விட்டது.

திரிகோணமலையில் சிங்கள ராணுவத்தினரின் தாக்குதல் அதிகமாகி உள்ளது. சிங்கள ராணுவத்தை எதிர்த்து விடுதலைப்புலிகள் கடுமையாக சண்டையிட்டு வருகின்றனர்.

எனவே அங்கு பத்திரிகையாளர்களோ, வெளிநாட்டினரோ செல்லக் கூடாது என்று தடை விதிக்கப்பட்டது.

சிங்கள ராணுவத்தின் வெறியாட்டத்தை பத்திரிகைகள் பிரசுரித்து விடும் என்று அஞ்சிய நிருபர்கள் அங்கே செல்லக் கூடாது என்று இலங்கை அரசு தடை விதித்துள்ளது குறிப்பிடத்தக்கது.

அந்தப் பகுதிக்கான ராணுவ தளபதி ஹர்ஷா குணரத்தினா இது பற்றி கூறுகையில் "திரிகோணமலைப்பகுதியில் சுற்றுலாத் தளம் ஏதும் இல்லை. எனவே அங்கு வெளிநாட்டினர் செல்ல வேண்டிய அவசியம் இல்லை. சுற்றுலாப்பயணி என்று கூறிக் கொண்டு பத்திரிகையாளர் யாரும் சென்று விடக்கூடாது என்பதற்காகவே அவ்வாறு தடை விதித்துள்ளோம்" என்று கூறினார்.

அந்தப் பகுதி பற்றி உண்மைக்குப் புறம்பான செய்தி ஏதும் பத்திரிகைகளில் வெளிவரவில்லை. எனவே இந்த அறிவிப்பு சரியானதல்ல என்று இலங்கை பத்திரிகை ஒன்று கூறியுள்ளது.

# தென் ஆற்காட்டில் தீவிர நிவாரண பணிகள்

கடலூர், நவ. 15— தென்னாற்காடு மாவட்டத்தில் வெள்ள நிவாரணப் பணிகள் தீவிரமாக நடைபெற்று வருகிறது.

50 ஆயிரத்து 700 ஹெக்டேர் பரப்பளவில் பயிர்கள் தண்ணீரில் மூழ்கியுள்ளது.

மாவட்டக்கலெக்டர்மேற்பார்வையில் 15 துணைக் கலெக்டர்கள் தலைமையில் நிவாரணப்பணிகள் தீவிரமாக நடைபெற்று வருகிறது,

பாதிக்கப்பட்ட மக்களுக்கு தேவைப்படும் உதவிகள் அனைத்தும் செய்யப்பட்டு வருகின்றன.

# இலங்கை அகதிகள் முகாமில் 118 குழந்தைகள் பிறப்பு

ராமனாதபுரம், நவ. 15- இலங்கையில் இருந்து தமிழகம் வரும் அகதிகள் எண்ணிக்கை கடந்த சில நாட்களாக குறைந்து வருகிறது.

பெரும்பான்மை அகதிகள் மண்டபம் முகாமில் தங்கியிருக்கிறார்கள். மண்டபத்துல் உள்ள இலங்கை அகதிகள் கடந்த 6 மாதத்தில் மட்டும் 118 குழந்தைகளை பெற்றெடுத்துள்ளனர்

இந்தக் குழந்தைகளில் 72 ஆண் குழந்தைகள். 45 பெண் குழந்தைகள். ஒரு குழந்தை இறந்தே பிறந்தது. கடந்த 6 மாதத்தில் இறந்துவிட்ட அகதிகளின் எண்ணிக்கை 26.

ராமனாதபுரம் மாவட்ட ஆட்சித்தலைவர் ராஜீவ் வாலியா இத்தகவல்களை நிருபர்களிடம் தெரிவித்தார்.





Edited and Published by K. RAVINDRAN on behalf of Thangamani Publications and Printed by All India Anna D M K. Perarignar Anna Trust Press at 34. Nelson Manickam Road, MADRAS-600029.

# அர்ஜுன் சிங் மந்திரி ஆகிறார்

## மத்திய அமைச்சரவையில் புதிய அமைச்சர்கள் சேர்ப்பு

**புதுடெல்லி, நவ. 15- பஞ்சாப் கவர்னர் பதவியிலிருந்து ராஜினாமாச் செய்த அர்ஜுன்சிங், மத்திய அமைச்சர் ஆவார் என்று தெரிய வருகிறது. மத்திய அமைச்சரவையில் புதிய அமைச்சர்கள் சேர்க்கப்படலாம் என்றும் கருதப்படுகிறது.**

பஞ்சாப் கவர்னர் அர்ஜுன்சிங், டெல்லி லெப்டினென்ட் கவர்னர் வாலி ஆகியோர் தங்கள் கவர்னர் பதவியை ராஜினாமாச் செய்தனர், ராஜினாமாக்களை குடியரசுத்தலைவர் ஏற்றுக்கொண்டார்.

பஞ்சாப் கவர்னராக சங்கர் தயாள் சர்மா நியமிக்கப்பட்டுள்ளார். தற்போது ஆந்திரா கவர்னராக சங்கர்தயாள்சர்மா இருக்கிறார்.

சர்மா பஞ்சாப் கவர்னர் ஆவதால், ஆந்திரா புதிய கவர்னராக முன்னாள் மத்திய அமைச்சர் குமுதபென் ஜோஷி நியமிக்கப்பட்டுள்ளார்.

டெல்லி கவர்னராக எச்.எல். கபூர் நியமிக்கப்பட்டுள்ளார். இவர் மாநிலங்களவை நியமன உறுப்பினராக இருப்பவர்.

ராஜஸ்தானில் கவர்னர் பதவி காலியாக இருந்தது. ராஜஸ்தான் உயர்நீதிமன்ற தலைமை நீதிபதி டி. பி. குப்தா கவர்னர் பணிகளை கவனித்து வந்தார்.

ராஜஸ்தான் கவர்னராக வசந்த்ராவ் பட்டீல் நியமிக்கப்பட்டார்.

மராட்டிய மாநில முதல்வராக நான்கு முறை பதவி வகித்தவர் வசந்த்ராவ் பட்டீல்.

சமீபத்தில் இவர் மீது இ.காங்கிரசார் புகார் கூறி இருந்தார்கள்.

### காரணம் என்ன?

அர்ஜுன்சிங், வலி ஆகியோர் 'திடீர்' என்று ராஜினாமா செய்வதற்கு என்ன காரணம் என்று தெரியவில்லை.

ஆனால் அர்ஜுன்சிங் கவர்னர் பதவியிலிருந்து விலக பல மாதங்களுக்கு முன்பே விருப்பம் தெரிவித்திருந்தார்.

கவர்னர் பதவியை விட முதலமைச்சர் பதவியை அல்லது மத்திய அமைச்சர் பதவியை அவர் விரும்பியதாக கூறப்பட்டது.

### சாதனை படைத்தவர்

பஞ்சாப் பிரச்சினையில் தீர்வு காணும் வகையில் மத்திய அரசுக்கும் லோங்கோவாலுக்கும் உடன்பாடு ஏற்பட்ட தல்லவா? அந்த உடன்பாட்டிற்காக பெரிதும் பாடுபட்டவர் அர்ஜுன்சிங்.

அவரை மத்திய அமைச்சராக்க பிரதமர் விரும்புவதாகத் தெரிகிறது. எனவே தான் அர்ஜுன்சிங் கவர்னர் பதவியிலிருந்து விலகினார் என்று கூறப்படுகிறது.

மேலும் சிலரும் மத்திய அமைச்சராக நியமிக்கப்பட இருப்பதாகத் தெரிகிறது.

## குடிசைவாழ் மக்களுக்கு ரூ. 51 ஆயிரம் கடனுதவி

சென்னை, நவ. 15— சென்னை பெரம்பூர் பகுதியில் உள்ள 23வது வட்டம் வியாசர்பாடி காந்திபுரம் திட்டப்பகுதியில் உள்ள குடிசை வாழ் மக்கள் 51 பேருக்கு 51 ஆயிரம் ரூபாய் கடனுதவியை அமைச்சர் அருணாசலம் வழங்கினார்.

விழாவுக்கு குடிசைமாற்று வாரியத் தலைவர் என்.வி.என். செல்வம் தலைமை வகித்தார். விழாவில் கருப்பன் ஐ.ஏ.எஸ்., நெல்சன், கோ. வீரப்பன், டாக்டர் பார்த்தசாரதி மற்றும் பலர் கலந்து கொண்டனர்.

## ஒரு ஜோடி யானைக்குட்டி ரூ 93 ஆயிரத்திற்கு விற்பனை

திருச்சூர், நவ. 15— கேரளாவில வடக்கஞ்சேரியில் இரண்டுயானைக்குட்டிகள் 3 ஆயிரத்து 250 ரூபாய்க்கு விற்கப்பட்டன.

கேரளாவில் ஒரு ஜோடி யானைக் குட்டிகள் இவ்வளவு அதிக விலைக்கு விற்கப்பட்டது இதுவே முதல் தடவையாகும்.

வடக்கஞ்சேரியை சேர்ந்த புல்சிராஜா என்பவரின் யானையின் பெயர் தாமோதரன். அந்த யானையின் குட்டிகளே தற்போது விற்கப்பட்டவையாகும்.

கேரளாவில் முன்பு ஒரு பெரிய யானை ரூ. 1 லட்சத்து 50 ஆயிரத்துக்கு விற்கப்பட்டதாக கால்நடை மருத்துவக் கல்லூரி பேராசிரியர் டாக்டர் பணிக்கர் கூறினார்.

## டி. வி. எஸ். வழங்கிய ஒரு லட்சம் உணவு பொட்டலம்

சென்னை, நவ. 15— கடந்த சில நாட்களாக பெய்த கனமழை வெள்ளத்தால் பாதிக்கப்பட்ட கோட்டூர்புரம், வேளச்சேரி மாம்பலம், வில்லிவாக்கம் கொரட்டூர், பாடி ஆகிய பகுதி மக்களுக்கு டி.வி.எஸ். சுந்தரம் கிளேட்டன் நிர்வாகம் ஒரு லட்சம் உணவுப் பொட்டலம் தயார் செய்து வழங்கியது.

# கொலம்பியா நாட்டில் எரிமலை வெடித்து 20 ஆயிரம் பேர் பலி

பொகாட்டோ, நவ 15. தென் அமெரிக்காவில் உள்ள கொலம்பியாவில் எரிமலை ஒன்று பயங்கரமாக வெடித்ததால், 20 ஆயிரத்துக்கும்மேற்பட்டவர்கள் உயிரிழந்தனர். நகரத்தின் பெரும்பகுதியை மண்கலந்த தீக்குழம்பு மூடியது.

தென் அமெரிக்காவில் உள்ள கொலம்பியா நாட்டின் மேற்குப் பகுதியில் நேற்று இரவு எரிமலை ஒன்று பெரும் சத்தத்துடன் வெடித்தது. இந்தச் சம்பவம் நடந்தபோது மக்கள் அனைவரும் அயர்ந்து தூங்கிக் கொண்டிருந்தனர்.

எரிமலை வெடித்ததால் மண்ணும் கற்களும் தீக்குழம்பாக வெகுதூரத்துக்கு சிதறியது. மடைதிறந்த வெள்ளம் போல் தீக்குழம்பு பெருக்கெடுத்து ஓடியது.

### நெருப்புடன் கலந்த மண்

எரிமலையின் பாகங்களும் இடிந்து சிதறின. நகரத்தின் பெரும்பகுதி தீக்குழம்பில் மூழ்கியது. கொலம்பியாவில் சுமார் 50 ஆயிரத்துக்கும் மேற்பட்ட மக்கள் வசித்து வருகிறார்கள். வெடிச்சத்தத்தைக் கேட்டு எழுந்து ஓடிய மக்கள் மீது மண்மாரி பொழிந்தது. நெருப்புடன் கலந்த மண் கட்டிடங்களை கப்பிக் கொண்டது.

கூக்குரல் போட்டுக் கொண்டு ஓடிய மக்கள்மீது எரிமலையின் இடிபாடுகள் உடைந்து விழுந்தன. சில கட்டிடங்களும் இடிந்தன. டொலிமா மாநிலத்தின் ஆர்மொரா நகரம்முழுவதும் சேதமானது. நகரத்தின் பெரும்பகுதி சின்னாபின்னமாகி நாசமடைந்தது. இந்த நகரத்தில் மட்டும் சுமார் 15 ஆயிரம் பேர் உயிரிழந்திருக்கலாம் என்று அஞ்சப்படுகிறது கொலம்பியா நாட்டின் மேற்குப் பகுதியில் ஏற்பட்ட இந்த பயங்கர சம்பவத்தால் சுமார் 20 ஆயிரத்திற்கும் மேற்பட்டோர் இறந்து விட்டனர் என்று அதிகாரிகள் கூறினர்.

தொலைபேசி, மின்சாரம் போக்குவரத்து ஆகிய அனைத்தும் பாதிக்கப்பட்டது. தகவல் தொடர்பு துண்டித்துப் போனதால் கொலம்பியா நாடே செயலிழந்து தவித்தது.

செஞ்சிலு வைப்படையினரும், போலீசார் மற்றும் ராணுவத்தினரும் நிவாரணப்பணிகளில் ஈடுபட்டுள்ளனர். ஆர்மெரா நகரம் முழுவதும் அழிந்து விட்டதாக கூறப்படுகிறது. எங்குப் பார்த்தாலும் மண்மேடு காட்சி அளிக்கிறது.

### எரிமலை

நிவாரணப் படையினர் இதுவரை 52 உடல்களை மீட்டதாகக் கூறப்படுகிறது.

இந்த எரிமலையின் பெயர் "நெவாடா டெல்ரூயிஸ்" 4 ஆயிரத்து 700 மீட்டர் அடித்தளத்தைக் கொண்ட இந்த எரிமலை கொலம்பியா நாட்டின் தலைநகரான பொகோடோவில் இருந்து 168 கிலோ மீட்டர் தூரத்தில் உள்ளது இந்த எரிமலை கடந்த 1845ம் ஆண்டில் தான் கடைசியாக நெருப்பைக் கக்கியது. அதன் பின்னர் அது நீண்ட காலமாக செயலற்று இருந்தது. கடந்த அக்டோபர் மாதம் இந்த எரிமலையில் இருந்த எரிமலையில் இருந்து புகை, சாம்பல், வாயு ஆகியவை வெளிப்பட்டன.

### மழைபோல் கொட்டியநெருப்பு

ஆயினும் அது பெரும் ஆபத்தை ஏற்படுத்துகிற அளவில் இல்லை. நேற்று இரவு இந்த எரிமலை வெடித்தது. நெருப்புகலந்த சேறும், மண்ணும் வானில் மிக அதிக உயரத்துக்கு தூக்கியடிக்கப்பட்டன. இவை மழைபோல சுற்றிலும் உள்ள நகரங்கள் மீது விழுந்தன.

எரிமலையால் பாதிக்கப்பட்டபகுதிகளில் பூரில்லோ கசாபியின்கா, லிபானோ முதலிய நகரங்களும் அடங்கும் இந்தப் பகுதிகளை விபரீதநாசம் ஏற்பட்ட பகுதிகளாக அதிகாரிகள் அறிவித்தனர்.

# வெள்ளத்தில் சிக்கியவர்களை காப்பாற்றியது எப்படி?

## போலீஸ் கமிஷனர் தேவாரம் பேட்டி

சென்னை, நவ. 15— சென்னை அடையாறு கோட்டூர்புரம் பகுதிகளில் வெள்ளத்தில் சிக்கியவர்களை படகுகள் மூலம் காப்பாற்றப்பட்ட விவரங்களை சென்னை போலீஸ் கமிஷனர் தேவாரம் தெரிவித்துள்ளார்.

பலத்த மழை காரணமாக சென்னை அடையாறு ஆற்றில் வெள்ளம் கரைபுரண்டு ஓடியது இதனால் சென்னை அடையாறு கோட்டூர்புரம், நந்தனம், டவர் காலனி, மார்மலாங் பாலம் குடியிருப்பு அசோக நகர், கே.கே. நகர் பாரி நகர் ஆகிய ஐந்து இடங்களில் உள்ள குடியிருப்புகளில் வெள்ளம் சூழ்ந்து கொண்டது.

அங்கு உள்ள மக்களை காப்பாற்றியது எப்படி என்று சென்னை நகர போலீஸ்கமிஷனர்தேவாரம் நிருபர்களிடம் விளக்கினார். அப்போது அவர் கூறியதாவது:-

"அடையாறு கோட்டூர் புரம் ஆற்றில் வெள்ளம் அதிகமாக வருகிறது என்பதை அறிந்து கடந்த 11-ந் தேதி அன்று நள்ளிரவு 2 மணிக்கு நானும் 2 துணைக்கமிஷனர்களும் மற்றும் போலீசாரும் அங்கு சென்று வெள்ள அபாயம் பற்றி தெரிவித்தோம்.

### நள்ளிரவில்...

அங்கு ஏறத்தாழ 5 ஆயிரம் வீடுகளில் 20 ஆயிரம் பேர் இருந்தனர் வெள்ளம் அதிகம் ஆவதற்குள் 11-ந் தேதி (திங்கட்கிழமை) இரவு 12 மணிக்கு தரைதளத்தில் உள்ள வீடுகளில் இருந்த 1,500 பேர்கள் வெளியேறினார்கள். அவர்களை பாதுகாப்பான இடங்களுக்கு அழைத்துச் சென்றோம்.

12ந்தேதி (செவ்வாய்க்கிழமை) காலையில் கோட்டூர்புரம் ஆற்றில் வெள்ளம் அதிகமாகியது. குடிசைமாற்று வாரிய கட்டிடங்களில் தரைத் தளத்தில் வீடுகளுக்குள் வெள்ளம் புகுந்தது.

அங்கு உள்ளவர்கள் எல்லோரும் கட்டிடத்தின் மொட்டை மாடியில் தஞ்சம் புகுந்தனர்

உடனே அதிகாலையில் போலீசார், தீயணைக்கும் படை வீரர்கள் கடற்படை வீரர்கள் மற்றும் காசிமேடு ராயபுரம் மீனவர்கள் ஆகியோர் மீட்பு பணியில் ஈடுபட்டனர்.

### சுழலில் சிக்கிய படகு

நான் சென்ற படகு, நீர் சுழலில் சிக்கி கட்டிடம் நோக்கி இழுத்துச் சென்றது. ஆற்றின் நடுவில் இருந்த முள் மரத்தை பற்றிக் கொண்டு சமாளித்தோம். அதன் பிறகு மாடி வீட்டில் உள்ளவர்கள் கொடுத்த கயிற்றினால் நானும் மற்றவர்களும் உயிர் தப்பினோம். மற்றவர்களை காப்பாற்றபோன எங்களை கரையில் உள்ளவர்கள் காப்பாற்ற வேண்டிய நிலைமை ஏற்பட்டது.

நாங்கள் சென்ற படகில் 20 பேர்களை காப்பாற்றி கொண்டு வந்தோம்.

அதன்பிறகு பெங்களூரில் இருந்து ராணுவ கேப்டன் வசிஷ்ட் தலைமையில். 5 ராணுவ படகுகள் லாரியில் கொண்டு வரப்பட்டன. இதில் 60 பேர்கள் பயணம் செய்யலாம். யுத்த நேரத்தில் எதிரிகளை தாக்குவதற்கு இந்தப் படகுகள் பயன்படுத்தப்படும்.

அத்தகைய வசதி உள்ள 5 படகுகளையும், ராணுவ வீரர்கள் உடனே கோட்டூர்புரம் ஆற்றில் இறக்கி மீட்பு பணியில் ஈடுபட்டனர். தண்ணீரின்சுழல் மிகவும் வேகமாக இருந்ததால் அதில் ஒரு படகு பழுதடைந்து விட்டது.

மற்றும் உள்ள 4 படகுகள் தீவிரமாக மீட்பு பணியில் ஈடுபட்டன.

கோட்டூர்புரத்தில் வீடுகளில் தவித்துக் கொண்டிருந்தவர்களில் பெரும்பாலானவர்களை காப்பாற்றி கரைக்கு கொண்டு வந்து பாதுகாப்பான இடங்களுக்கு அழைத்துச் சென்றோம்.

மாடியில் தங்கியிருந்தவர்கள் கீழே வருவதற்கு விரும்பவில்லை, "நாங்கள் பாதுகாப்பாக இருக்கிறோம்" என்று கூறிவிட்டனர்.

### பிளாஸ்டிக் கேனில்...

இதனால் அவர்களுக்கு பிளாஸ்டிக் கேனில் குடி தண்ணீர் மற்றும் உணவு பொட்டலங்களையும் படகில் எடுத்துச் சென்று கொடுத்தோம்.

'நந்தனம் டவர் பிளாக்' குடியிருப்பில் தரை தளத்து வீடுகள் முழுவதும் நீரில் மூழ்கிவிட்டது. அங்குள்ளவர்கள் மொட்டை மாடியில் தஞ்சம் புகுந்தனர். அங்கு மின்சாரம் டெலிபோன் மற்றும் குடிதண்ணீர் வசதி இல்லாமல் தவித்தனர்.

காசிமேடு ராயபுரம் பகுதிகளிலிருந்து கட்டு மரங்கள் வரவழைக்கப்பட்டு அதில் மீனவர்களுடன் நான் சென்றேன். அவர்களுக்கு குடி தண்ணீர் ரொட்டி ஆகியவை கொடுத்தோம்.

கலெக்டர் சைலேந்திரபாபு நேற்று முன்தினம் படகு மூலம் அழைத்து வரப்பட்டார். அங்கு அவருடைய மனைவி மற்றும் குழந்தைகள் வேலைக்காரர்கள் ஆகியோர் மாடியில் இருந்தனர்.

அவர்களின் மாடி வீடு ஆற்றை நோக்கி உள்ளது. நாங்கள் போன படகு அந்தக் கட்டிடத்தின் முதல் மாடி "பால்கனி" பக்கம் போய் நின்றது. கலெக்டரின் மனைவி மற்றும் குழந்தைகளை படகில் ஏற்றிக் கொண்டு வந்தோம்.

வியாழக்கிழமை (நேற்று) காலை படகில் கோட்டூர்புரம், நந்தனம் டவர் ஆகிய இடங்களின் மாடி வீடுகளுக்கு படகில் சென்று உணவு வழங்கப்பட்டது.



### போராட்டம்

போலீசார், தீயணைக்கும் படையினர், ராணுவம், கடற்படை, ஊர் காவலர் படை, ஆகிய பிரிவுகளைச் சேர்ந்தவர்கள் 72 மணி நேரம் போராடி மீட்பு பணியில் ஈடுபட்டனர்.

1976-ல் கோட்டூர்புரத்தில் வெள்ளம்புகுந்தபோது தண்ணீர் ஓட்டம் இல்லை, மழை தூரல் இல்லை, இப்போது பலத்த மழையினாலும். தண்ணீர் ஓட்டத்தினாலும்போலீசார்நீச்சல்போட வேண்டியகஷ்டம் ஏற்பட்டது.

வடசென்னையில் பெரும்பாலான குடிசைப் பகுதிகளை வெள்ளம் சூழ்ந்து உள்ளது. குடிசைகள் இடிந்து விழுந்தும், மின்சாரம் தாக்கியும் சிலர் மரணம் அடைந்துள்ளனர்.

கோட்டூர்புரத்தில் வெள்ளம் புகுந்தபோது குளிரில் நடுங்கி வயதான ஒருவர் மரணம் அடைந்துள்ளார். மற்ற எந்த விதமான அசம்பாவிதங்களும் இல்லை.

கோட்டூர்புரத்தில் வெள்ளம் வடிந்து வருகிறது. கடந்த 2 நாட்களைவிட நேற்று வெள்ளம் குறைந்து விட்டது. முன்பு தரை தளத்தின் வீடுகள்முழுவதும் மூழ்கி இருந்தன. இப்போது அங்கு பாதி அளவு தண்ணீர் குறைந்து விட்டது.

கோட்டூர்புரம் கோவில் நீரில் மூழ்கி இருந்தது. இப்போது கோவில் முழுவதும் தெரிகிறது.

கோவில் அருகில் போய் நின்று பார்க்கலாம். கோட்டூர்புரம் அபாயக் கட்டத்தை தாண்டி விட்டது. மழை இல்லாமல் இருந்தால் இரண்டு நாட்களில் தண்ணீர் வடிந்து விடும்.

### முதல்வர்

கோட்டூர்புரத்துக்கு கவர்னர் குரானா, முதல் அமைச்சர் எம். ஜி. ஆர் ஆகியோர் வந்து பார்த்தனர். அமைச்சர்கள். மற்றும் அதிகாரிகளும் வந்திருந்தனர்.

மக்கள் தங்கிஉள்ள இடங்களில் பலத்த போலீஸ் பாதுகாப்பு போடப்பட்டுள்ளது.

போலீஸார் 24மணி நேர முன்தயார் நிலையில் உள்ளனர்.

### பாதுகாப்பு நடவடிக்கை

இது போன்ற ஆபத்தான வெள்ள நேரங்களில் பாதுகாப்பு நடவடிக்கையில் ஈடுபட போலீசாருக்கு தனியாக விசைப் படகுகள் அவசியம். பெங்களூரில் இருந்து ராணுவ அதிகாரி வசிஷ்ட் தலைமையில் 32 ராணுவ வீரர்கள் 5 ராணுவ படகுகளை கொண்டு வந்தது மிகவும் உதவியாக இருந்தது.

சுந்தரம் கிளேட்டன்ஸ் நிறுவனத்தினர் 1 லட்சத்துக்குமேல் உணவு பொட்டலங்களை வழங்கினார்கள்.

சென்னை நகரில் டெலிபோன்கள் இயங்கவில்லை. போலீசாரின் கம்பியில்லாத் தந்தி வயர்லஸ் மிகவும் உதவியது.

இவ்வாறு போலீஸ் கமிஷனர் தேவாரம் கூறினார்.

## அருப்புக் கோட்டை கூட்டுறவு நகரவங்கி ஆலோசனைக் கூட்டம்

அருப்புக்கோட்டை, நவ 15— காமராஜர்மாவட்டம் அருப்புக் கோட்டையில் அருப்புக்கோட்டை கூட்டுறவு நகர வங்கி துவங்குவதற்கான ஆலோசனைக் கூட்டம் பட்டாபிராமர் கோவில் கல்யாண மண்டபத்தில் நடைபெற்றது.

இக்கூட்டத்திற்கு இதன் பிரதம அமைப்பாளர் டி. சுப்பாராஜ் தலைமைதாங்கி நகர வங்கி துவங்க வேண்டியதன் அவசியம் பற்றியும் அதனால் ஏற்படும் பொருளாதார முன்னேற்றம் பற்றியும் எடுத்துரைத்தார்.

இக்கூட்டத்தில் கூட்டுறவு சங்கங்களின் துணைப்பதிவாளர் ஏ.எஸ். ஆறுமுகம் விருதுநகர் நகர கூட்டுறவு வங்கியின் செயலாளர் பொறுப்பு ஏ. உதயசங்கர் ஆகியோர் கூட்டுறவு நகர வங்கியின் பணிகள் பற்றியும் துவங்கவேண்டிய நடைமுறையில் பின்பற்ற வேண்டிய விதிமுறைகள் பற்றியும் சிறப்புரை யாற்றினர்

முடிவில் எஸ். சங்கரப்பன் அனைவருக்கும் நன்றி கூறினார்.

# கோவை-நீலகிரி திருச்சி பால்வளத் தலைவர்கள் நியமனம்

சென்னை, நவ. 15— கோவை, நீலகிரி திருச்சி, மாவட்டங்களின் பால் உற்பத்தியாளர் ஒன்றிய தலைவர்கள் நியமனம் செய்யப்பட்டுள்ளனர்.

கோவை மாவட்டகூட்டுறவு பால் உற்பத்தியாளர் ஒன்றியத் தலைவராக கோவை மாநகர் மாவட்ட துணைச் செயலாளர் பி. பாலசுப்பிரமணியம் நியமிக்கப்பட்டுள்ளார். மாவட்ட பால்வள தலைவராக பொறுப்பேற்ற பாலசுப்பிரமணியம் முதல்வர் புரட்சித் தலைவருக்கு பொன்னாடை போர்த்தி ஆசி பெற்றார்.

அமைச்சர்கள் கே.ஏ.கே. அரங்கநாயகம் முத்துசாமி, வீட்டு வசதி வாரியத் தலைவர் திருப்பூர் மணிமாறன். கழகநாடாளுமன்ற குழுதலைவர் பி, குழந்தைவேலு கோவைதம்பி, பொள்ளாச்சி ரத்தினம் எம். எல் ஏ. ஆகியோருக்கு மாலைகள் அணிவித்து வாழ்த்து பெற்றார்,

அப்போது போரூர் கே. பி. ராசு, காலனி ரங்கநாதன், கே. பி. எஸ். மணியன், ஆகியோர் உடனிருந்தனர்.

### நீலகிரி

நீலகிரி மாவட்ட பால் உற்பத்தியாளர் ஒன்றிய தலைவராக நீலகிரி மாவட்ட எம். ஜி. ஆர். மன்ற செயலாளர் எமரால்டு கே. மணி நியமிக்கப்பட்டுள்ளார்.

தலைவராக பொறுப்பேற்ற எமரால்டு மணி முதல்வர் புரட்சிதலைவருக்குமாலை அணிவித்துஆசி பெற்றார்.

கழக பொதுச் செயலாளர் இராகவானந்தம், அமைச்சர்கள் கே.ஏ.கே. ஆர்.எம்.வீ., காளிமுத்து, அரங்கநாயகம் மற்றும் முசிறிபுத்தன் எம் எல்.ஏ., ஆவின் தலைவர் கலைமணி திருச்சி எம்.எல்.ஏ. ஆகியோருக்கு மாலை அணிவித்து வாழ்த்து பெற்றார்.

### திருச்சி

திருச்சிமாவட்ட பால் உற்பத்தியாளர் ஒன்றிய தலைவராக யாக சுப்பிரமணியம் நியமிக்கப்பட்டுள்ளார்.

தலைவராக பொறுப்பேற்ற யாக சுப்பிரமணியம் முதல்வர் புரட்சித் தலைவரை சந்தித்து ஆசி பெற்றார்.

பின்னர் அமைச்சர்கள் கே. ஏ. கே. நல்லுசாமி சவுந்தரராசன், அருணாசலம் ஆகியோரிடம் வாழ்த்து பெற்றார்.

அப்போது தில்லைகாந்தி எம்.எல் ஏ. உடனிருந்தார்.

## முன்னாள் படைவீரர்கள் மனைவிகளுக்கு ஓய்வூதியம்

சென்னை நவ 15— ராணுவத்தில் பணிபுரிந்து ஓய்வு பெற்றவர்கள், ஓய்வூதியம் பெறும் காலத்தில இறந்துவிட்டால் அவர்களுடைய மனைவிகளுக்கு மத்திய அரசு ஓய்வூதியம் வழங்குவதில்லை. ஆனால் தற்போது அவர்களுக்கு ஓய்வூதியம் அளிக்கும்படிமத்திய அரசு உத்தரவிட்டுள்ளது.

இதன்படி ராமநாதபுரம் மாவட்டத்தைச் சேர்ந்த முன்னாள் படைவீரர்களின் மனைவிகள், முன்னாள் படை வீரர்கள் அலுவலகம் வாணக்காரத் தெரு, ராமநாதபுரம் என்ற விலாசத்துடன் தொடர்பு கொள்ளுமாறு மாவட்ட ஆட்சித் தலைவர் ராஜீவ் வாலியா கேட்டுக் கொண்டுள்ளார்.

## கல்லூரி மாணவர்கள் பொது சேவையில் ஈடுபட வேண்டும்

### துணை சபாநாயகர் தம்பித்துரை வேண்டுகோள்

தர்மபுரி நவ.15— கல்லூரி மாணவர்கள் பொதுச்சேவையில் ஈடுபட வேண்டும் என்று நாடாளுமன்ற துணை சபாநாயகர் தம்பித்துரை கூறினார்.

தர்மபுரி மாவட்டம் கிருஷ்ணகிரி அரசினர் கல்லூரி மாணவர் பேரவை துவக்க விழா, சட்டமன்ற உறுப்பினர் சின்னராசு தலைமையில் நடைபெற்றது. இவ்விழாவில் நாடாளுமன்ற துணை சபாநாயகர் தம்பித்துரை கலந்து கொண்டு பேசினார். அப்போது அவர் கூறியதாவது:

கல்லூரியில் மாணவர்கள் கல்விகற்பதோடு மட்டும் இருந்து விடக்கூடாது. பொது வாழ்க்கைக்குத் தேவையான பாடங்களையும் கற்றுக் கொள்ள வேண்டும்.



அதேபோல் வாழ்க்கைக்கு தேவையான அடிப்படை கருத்துக்களையும் தெரிந்து கொள்ள வேண்டும்.

ஜனநாயகநாட்டில் படிக்கும்போதே சமுதாயத்திற்கும் பாடுபட வேண்டும், பொது சேவை செய்ய வேண்டும்.

மாணவர் பேரவைகள் தங்கள் கல்லூரிகள், பள்ளிகளின் வளர்ச்சிக்கு உறுதுணையாக பல கருத்துக்களை கூற வேண்டும். மற்றும் பொது சேவையில ஈடுபட வேண்டும்.

இவ்வாறு நாடாளுமன்ற துணை சபாநாயகர் தம்பித்துரை கூறினார்.

# "ராணுவத்தில் சேர வருக" சீக்கியர்க்குக் கனடா அழைப்பு

வாஷிங்டன், நவ. 15— கனடா நாட்டு ராணுவத்தில் சேர வருமாறு சீக்கியர்களை கனடா அழைத்துள்ளது.

கனடா நாட்டில் ஏராளமான சீக்கியர்கள் சென்று குடியேறி உள்ளனர்.

அவர்களில் தீவிரவாதிகள் பலர் இருக்கிறார்கள்.

காலிஸ்தான் கேட்டு கிளர்ச்சி செய்யும் கும்பலை சேர்ந்தவர்களும் உள்ளனர். இவர்களை கனடா ராணுவத்தில் சேருமாறு கனடா ராணுவத்துக்கு ஆள் எடுக்கும் அதிகாரி கேப்டன் ரெய்லி கேட்டுக் கொண்டுள்ளார்

சீக்கியர்கள் மாநாடு கனடாவில் நடந்தபோது அதிலும் ரெய்லி பேசினார். "கனடா நாட்டு ராணுவத்தில் சேருங்கள். உங்களுக்கு மாதம் 500 டாலர் (ரூபாய் 6 ஆயிரம்), சம்பளம் தருகிறோம்' என்று ரெய்லி அப்போது கூறினார்.

சீக்கியர் மாநாட்டில் கனடாவின் மிஸ்ஸாசுகா நகர மேயர் குமாரி ஹாசல் கலந்து கொண்டார்.

சீக்கிய தீவிரவாதிகளின் கோரிக்கையை அந்தப் பெண் ஆதரித்தார். சீக்கியர்கள் பற்றி தவறான எண்ணம் பரப்பப்படுகிறது என்று அந்தப் பெண் பேசினார்.

# வெள்ளத்தால் பாதிக்கப்பட்ட மக்களுக்கு தொடர்ந்து உணவு சப்ளை செய்ய புரட்சிதலைவர் உத்தரவு

சென்னை, நவ. 15 — வெள்ளத்தால் பாதிக்கப்பட்ட ஏழைகளுக்கு கொடுக்கும் உணவை நல்ல உணவாக தொடர்ந்து கொடுக்க வேண்டும் என முதல்வர் புரட்சித்தலைவர் உத்தரவிட்டுள்ளார்.

வெள்ளத்தால் பாதிக்கப்பட்ட தஞ்சை தென்னாற்காடு, செங்கற்பட்டு மற்றும் சென்னை நகர் ஆகிய பகுதிகளை முதல்வர் புரட்சித் தலைவர் ஹெலிகாப்டர் மூலம் சுற்றிப்பார்த்தார்.

முதல்வருடன் சென்று வந்த தலைமைச் செயலாளர் டி.வி. அந்தோணி நிருபர்களிடம் கூறியதாவது:

மதுராந்தகம் ஏரியில் பெரிய உடைப்பு ஏற்பட்டது.

அந்த உடைப்புகளை வெகுவிரைவில் அடைக்கும்படி முதல்வர் உத்தரவிட்டுள்ளார்.

ஏரி உடைப்புஎடுத்ததால் ஏற்பட்ட வெள்ளத் தண்ணீரால் 20கிராமங்கள்மூழ்கின அவர்களுக்கு ராணுவ ஹெலிகாப்டர் மூலம் உணவுப் பொருட்களை வழங்கும்படி முதல்வர் உத்தரவிட்டுள்ளார்.

செங்கற்பட்டு மாவட்டத்தில் ஒரு லட்சத்து 50 ஆயிரம் ஏக்கர் நிலத்திலும் தென்னாற்காடு மாவட்டத்தில்80 ஆயிரம் ஏக்கரிலும், தஞ்சை மாவட்டத்தில் 1 லட்சத்து 25 ஆயிரம் ஏக்கர் நிலத்திலும் பயிர்கள் தண்ணீரில் மூழ்கியுள்ளது.

வெள்ளத்தால் பாதிக்கப்பட்டுள்ள பயிர்களுக்குஉரம் பூச்சி மருந்து சப்ளைசெய்ய நடவடிக்கை எடுக்கப்பட்டுள்ளது.

## முதல்வர் உத்தரவு

வெள்ளப்பகுதிகளை சுற்றிப்பார்த்த முதல்வர் உடைந்த சாலைகளை சீர் செய்தல், உடைந்த குளங்களை சீர்செய்தல், போன்றவற்றை விரைவில் நிறைவேற்றுவதுடன், பாதிக்கப்பட்ட ஏழைகளுக்கு கொடுக்கும் உணவை, நல்ல உணவாக தேவைப்படும் வரை தொடர்ந்து கொடுக்கும்படி உத்தரவிட்டுள்ளார்.

மாவட்டங்களில் ஏற்பட்டுள்ள சேதங்களின் விவரங்களைத் தெரிவிக்கும்படி மாவட்ட கலெக்டர்கள் கேட்டுக் கொள்ளப்பட்டுள்ளனர்.

சென்னை அடையாற்றில் உள்ள திரு.வி.க. பாலமும் சாலையும் சந்திக்கும் இடத்தில்மண் அரிப்பு எடுத்துள்ளது.

அது உடனடியாக சரி செய்யப்படும், நிபுணர்கள் பரிசோதனை செய்த பிறகு போக்குவரத்துக்கு அனுமதிக்கப்படும்.

சென்னை நகரில் வெள்ளத்தால் பாதிக்கப்பட்ட பகுதிகளில் நடைபெறும் மீட்புப் பணிகளை முதல்வர் சுற்றிப்பார்த்தார்.

உணவுப் பொருட்களையும், பிளாஸ்டிக் டின்களில் அடைக்கப்பட்ட குடிநீரையும் ராணுவத்தினர் படகுகள் மூலம கொண்டு சென்று சப்ளை செய்வதையும், முதலவர்பார்வையிட்டார்.

இதற்காக, போலீசாரையும், மாநகராட்சி ஊழியர்களையும், ராணுவத்தினரையும் முதல்வர் பாராட்டி நன்றி தெரிவித்தார்.

துறைமுகக்கழக கேப்டன் கபூர் ராணுவ அதிகாரிகள் கர்னல் மகேநதுரு கர்னல் செல்வநாதன், கடற்படை அதிகாரிகள் ராம் சாகர் நட்கர்னி ஆகியோர் நிவாரணப்பணிகளில் ஈடுபட்டனர்.

இவ்வாறு தலைமைச் செயலாளர் அந்தோணி கூறினார்.

## வெள்ளச் சேதம்: ஆர்வி-வருத்தம்

புதுடெல்லி, நவ. 15— தமிழகத்திலும் புதுவையிலும் வெள்ளத்தினால் ஏற்பட்ட உயிர்ச் சேதங்கள் பற்றி துணை ஜனாதிபதி ஆர். வெங்கட்ராமன் வருத்தம் தெரிவித்துள்ளார்.

தமிழக ஆளுநர் எஸ். எல். குரானாவுக்கும், புதுவை லெப்டினட் ஆளுநர் டி.பி. திவாரிக்கும் தனது வருத்தத்தை தெரிவித்து செய்திகளை அனுப்பியுள்ளார்.



## ஓராண்டு குடிநீர் பஞ்சம் இல்லை

சென்னை, நவ. 15— சென்னை நகருக்கு குடிநீர் வழங்கும் செங்குன்றம், சோழவரம், பூண்டி ஏரிகள் முக்கால்வாசி அளவு நிரம்பி விட்டன.

இந்த ஏரிகளுக்கு இன்றும் தண்ணீர் வரத்து இருக்கிறது.

சென்னை நகருக்கு குடிநீர் வழங்கும் ஏரிகளான செங்குன்றம்ஏரியின் கொள்ளளவு 2850 மில்லியின் கன அடியாகும் இன்று காலை நிலவரப்படி 2200 மில்லியன் தண்ணீர் வந்துள்ளது.

பூண்டி ஏரியின்முழுஅளவு 2,750 மில்லியன் கன அடியாகும் இதில் 2006 மில்லியன்கன அடிநீர்வந்துள்ளது.

சோழவரத்தின் முழு கொள்ளளவு 888 மில்லியன் கன அடியாகும், இதில் 618 மில்லியன் கன அடி நீர் வந்துள்ளது.

மொத்தம் 6.5 டி.எம்.சி. அளவில் 4.8 டி.எம்.சி. நீர் வந்துள்ளது.

மேலும் தண்ணீர் வந்து கொண்டு இருக்கிறது.

சென்னை நகரில் ஓராண்டு குடிநீர் தேவைக்கு போதிய தண்ணீர் கிடைத்துள்ளது என்று தலைமை செயலாளர் டி.வி.அந்தோணி கூறினார்.

# வெள்ளத்தால் பலத்த சேதமுற்ற செங்கல்பட்டு

சென்னை, நவ. 15— செங்கல்பட்டு வட்டாரம் மழை வெள்ளத்தால் பலத்த சேதம் அடைந்தது.

தமிழகத்திலேயே பெரிய ஏரியான மதுராந்தகம் ஏரி மழை வெள்ளத்தால் உடைப்பு எடுத்தது.

மழையால் பாதிக்கப்பட்டிருந்த பல கிராமங்களுக்குள் ஏரி உடைப்பால் நுழைந்த தண்ணீர் சேதத்தை அதிகப்படுத்தியது. செங்கல்பட்டு உட்பட பல இடங்கள் வெள்ளத்தால் பெருமளவு பாதிக்கப்பட்டன.

ரயில் பாதைகள் எல்லாம் வெள்ளககாடானது.

## செங்கையில் சேதம்

செங்கைமாவட்ட கலெக்டர் மாத்யூ நிருபர்களிடம் கூறியதாவது:-

செங்கற்பட்டு மாவட்டத்தில் 100 ஏரிகள் உடைப்பெடுத்துள்ளன. அவற்றில் 14 ஏரிகள் சீர்படுத்தப்பட்டுவிட்டன. 2 லட்சத்து ஐம்பது பேர் வீடு இழந்திருக்கிறார்கள். 600 கிராமங்கள் பாதிக்கப்பட்டன, 50 ஆயிரம் குடிசைகள் மூழ்கின,

வீடு இழந்த மக்கள் மேட்டுப் பகுதிகளில் தங்கியுள்ளனர். அரசு ஜீப்கள் அங்கு சென்று அவர்களுக்கு உணவு வழங்கி வருகிறது பாதுகாப்பான இடங்களில் அவர்கள் அமர்த்தப்பட்டுள்ளனர்.

## 15 பேர் சாவு

ஒன்றரை லட்சம் ஏக்கர் நிலம் பாதிக்கப்பட்டுள்ளது வெள்ளத்தால் 15பேர்இறந்துள்ளனர்.

மதுராந்தகத்தில் கல்லாறு உடைப்பு எடுத்ததால் ரோட்டில் 200 அடி தூரத்துக்கு வெள்ளம் சூழ்ந்து போக்குவரத்து பாதிக்கப்பட்டுள்ளது. மதுராந்தக வரை 10கிராமங்கள் மூழ்கியுள்ளன.

மதுராந்தகம் அருகே கருங்குழியில் மின்சார ரயில் பாதையில் 100 அடி தூரம்வெள்ளத்தால் பாதிக்கப்பட்டுள்ளதுஇதனால்ஒரு வாரத்துக்கு இநதப்பாதையில் ரயில் ஓட முடியாத நிலைமை ஏற்பட்டுள்ளது மீட்பு பணிகள் துரிதமாக நடக்கின்றன.

இவ்வாறு கலெக்டர் கூறினார்.

## அந்தோ... ஒரு துயரம்

அம்பேத்கார் பாலம் அருகே சண்முகபிள்ளை தெருவில்வசிப்பவர் கவுஸ் பாட்சா வயது 40 வெள்ளத்தால் இவரது வீடுமூழ்கியது.

உடனே மனைவிகுழந்தைகளை பாதுகாப்பான இடத்துக்கு அழைத்துச் சென்றார் அவர்களைப் பத்திரமான இடத்தில் அமர்த்திவிட்டு வீட்டுக்கு சாமான்களை எடுத்துவரச் சென்றார். போனவர் திரும்பி வரவே இல்லை.

வீட்டில் வெள்ளத்தில் அவர் பிணமாகக் கிடந்தது கண்டுபிடிக்கப் பட்டது.

## திருவொற்றியூரில் நிவாரணப்பணி

திருவொற்றியூர் பகுதியில் பல இடங்கள் வெள்ளத்தில் மூழ்கின.

திருவொற்றியூர் நகர கழக செயலாளர் குப்பன், அவைத் தலைவர் பால்ராஜ் மற்றும் தோழர்கள் வெள்ளப்பகுதிகளுக்குச் சென்று பாதிக்கப்பட்ட மக்களுக்கு உதவினர்.

வெள்ளம் உள்ள பகுதிகளில் 15 கட்டுமரங்களில் மீனவர்களுடன் சென்று பாதிக்கப்பட்ட பகுதி மக்களை பாதுகாப்பான இடங்களுக்கு ஏற்றிச் சென்றனர். ஜெயபாரதி எம்.எல்.ஏ. வும் மற்றும் நகரசபை அதிகாரிகளும் மீட்பு பணிகளில் தீவிரமாக ஈடுபட்டுள்ளனர்.

## தஞ்சை

தஞ்சை மாவட்டத்திலும் பலத்த வெள்ளச்சேதம் ஏற்பட்டது. ஏராளமான மக்கள் வீடு இழந்து தவிக்கிறார்கள். 1 லட்சத்து 20 ஆயிரம் ஏக்கர் நெல்பயிர் வெள்ளத்தால் பாதிக்கப்பட்டுள்ளது.

தொலைப்பேசி தொடர்புகள் பாதிக்கப்பட்டன. இப்போது அவை கொஞ்சம் கொஞ்சமாக சரி செய்யப்படுகின்றன.

## செங்கை மாவட்டத்தில் 20ஆயிரம் பேர் மீட்பு

சென்னை, நவ. 15— செங்கல்பட்டுகிழக்கு மாவட்டத்தில் கடந்த 10 நாட்களாக பெய்த மழையின் காரணமாக, ஏராளமான ஏரிகள் உடைப்பு ஏற்பட்டது. இதனால் அப்பகுதியில் உள்ள எல்லா கிராமங்களும் தண்ணீரில் மூழ்கின. செங்கல்பட்டு கிழக்குப் பகுதி போலீஸ் சூப்பிரண்ட் சுப்பையா போலீஸ் படையுடன் சென்று வெள்ளத்தில் சிக்கியவர்களைமீட்டார் சுமார் 20 ஆயிரம்பேர் வெள்ளப்பகுதியிலிருந்து மீட்கப்பட்டு அப்பகுதிகளில் உள்ள கல்யாண மண்டபங்கள் பள்ளிகள் ஆகியவற்றில் தங்கவைக்கப்பட்டனர்.

அவர்களுக்குஉடனடியாக உணவுகள் வழங்க போலீஸ் சூப்பிரண்ட் சுப்பையா ஏற்பாடுகள் செய்தார்.

# இது வரை ஏற்படாத அளவு பாதிப்பு ஏற்பட்டு இருக்கிறது

### முதல்வருடன்ஹெலிகாப்டரில்சென்ற அமைச்சர் முத்துசாமி பேட்டி

சென்னை, நவ. 15— தமிழ்நாட்டில் இதுவரை ஏற்படாத அளவுக்கு வெள்ள பாதிப்பு ஏற்பட்டு இருக்கிறது. என்று அமைச்சர்முத்துசாமி கூறினார்.

வெள்ள பாதிப்பு இடங்களை முதல்வர் புரட்சித் தலைவர் ஹெலிகாப்டரில் சுற்றிப் பார்த்தபோது அவருடன் அமைச்சர்முத்துசாமியும் உடன் சென்றார்.

வெள்ளப் பாதிப்பு பற்றி அமைச்சர் முத்துசாமி கூறியதாவது:—

வெள்ளப் பாதிப்பு இடங்களைப் பார்க்க முதல்வர் புரட்சித்தலைவருடன் சென்றேன்.

தமிழ்நாட்டில் இதுவரை இப்படிப்பட்ட வெள்ளப் பாதிப்பு ஏற்படவில்லை அந்த அளவுக்கு பாதிப்பும் நஷ்டமும் ஏற்பட்டிருக்கிறது.

ஹெலிகாப்டரிலிருந்து பார்த்தபோது எங்கும் வெள்ள மயமாக காணப்பட்டது.

பயிர் நிலங்கள் எல்லாம் மூழ்கிக்கிடக்கின்றன பயிர் சேதம் பெரும் அளவில் இருக்கும்.

முதல்வர்புரட்சித் தலைவர் ஹெலிகாப்டர் மூலம்நேராகவட சென்னை சென்று பார்த்துவிட்டு பிறகு கடலோரமாக தஞ்சை வரை சென்று பார்வையிட்டார்,

பிறகு தென்ஆற்காடு, செங்கற்பட்டு மாவட்டங்களைப்பார்வையிட்டார்.

மதுராந்தகம் ஏரியின் நிலமையை கூர்ந்து பார்த்தார்.

பிறகு செம்பரம்பாக்கம் ஏரிப்பகுதியையும் கவனமாகப் பார்வையிட்டார்.

இந்த வெள்ளத்தால் சாலைகள் பெரும் அளவில் பாதிக்கப்பட்டு இருக்கிறது. சாலைகள் எல்லாம் எதுவும் தெரியாதபடி வெள்ளக்காடாக இருக்கிறது.

பாதிக்கப்பட்ட மக்களுக்கு உடனடி உதவிகளை செய்ய புரட்சித்தலைவர் உத்திரவிட்டு இருக்கிறார்.

இவ்வாறு அமைச்சர் முத்துசாமி கூறினார்.

## கடலில் புதிய எண்ணை கிணறு

பம்பாய், நவ. 15— பம்பாய் கடலில் புதிய எண்ணை கிணறு தோண்டப்பட்டுள்ளது அதிலிருந்து தினசரி 2380 பீப்பாய் எண்ணை கிடைக்கிறது.

பம்பாய் கரையிலிருந்து 70 கிலோ மீட்டர் தூரத்தில் நடுக்கடலில் அந்த புதிய எண்ணை கிணறுகள் கண்டுபிடிக்கப் பட்டுள்ளது.



# சென்னை - விழுப்புரம் ரெயில்பாதை சீரமைக்க ஒருமாதகாலம் ஆகும்

### 4 ஆயிரத்திற்கும் மேற்பட்ட தொழிலாளர்கள் தீவிர பணி

சென்னை, நவ. 15— அண்மையில் பெய்த பெரு மழையினால் மதுராந்தகம் அருகே ரெயில் பாதையில் ஏற்பட்ட சீர்குலைவைச் சரிசெய்யும் பணியில் 4 ஆயிரம் தொழிலாளர்களும் நூறு என்ஜினீயர்களும் ஈடுபட்டிருக்கிறார்கள்.

என்றாலும் ரெயில் பாதையைச் சரி செய்ய இன்னும் ஒரு மாத காலம் ஆகும் என்று எதிர்பார்க்கப்படுகிறது அந்த அளவுக்கு பல இடங்களில் தண்டவாளங்கள் வெள்ளத்தில் அடித்துச் செல்லப்பட்டு இருக்கின்றன.

மதுராந்தகம் அருகே மட்டும் அறுநூறு மீட்டர் தூரத்திற்கு ரெயில் பாதை அடியோடு நாசமாகி விட்டது.

மதுராநதகம் ஏரியில் ஏற்பட்ட உடைப்பின் காரணமாக காளியாற்றின் மீது இருந்த ரெயில் பாலமும் அடியோடு அடித்துச் செல்லப்பட்டு விட்டது.

இந்தப் பாலம் 85 ஆண்டுகளுக்கு முன்னால் கட்டப்பட்ட பாலமாகும்.

## ரூ. 2 கோடி நட்டம்

ரெயில்வே துறைக்கு மட்டும் வெள்ளப் பாதிப்பால் இரண்டு கோடி ரூபாய்க்கு மேல் நட்டம் ஏற்பட்டிருக்கும் என்று மதிப்பிடப்படுகிறது.

நாலாயிரத்திற்கும் மேற்பட்ட ரெயில்வே தொழிலாளர்கள் செங்கல்பட்டில் முகாமிட்டுக்கொண்டு ரெயில் பாதையை சீரமைக்கும் பணியில் ஈடுபட்டிருக்கிறார்கள்.

காளியாற்றின்மீது சாலை போக்குவரத்திறகாக கட்டப்பட்டிருந்த பாலமும் வெள்ளத்தில் அடியோடு அடித்துச் செல்லப்பட்டிருக்கிறது.

மதுராந்தகத்தை அடுத்து விழுப்புரம்செல்லும் பாதையில் மேலும் இரண்டு சிறிய ரெயில் பாலங்கள் வெள்ளத்தில் அடித்துச்செல்லப்பட்டிருக்கிறது.

தென்னக ரயில்வேபொது மேலாளர் கே. விசுவநாதனும் பிரதம என்ஜினியர் ராகவனும் ராணுவ ஹெலிகாப்டர் மூலம் சேதப் பகுதிகளைச் சுற்றி பார்த்தனர்.